# மனம் போல வாழ்வு

யூத நாட்டுப்புற கதை

மார்கோட் சாமக்

தமிழில் கிருஷ்ணன்



ஒரு குக்கிராமத்தில் ஒரு எளிய மனிதன் தன் தாய்,மனைவி மற்றும் 6 குழந்தைகளோடு ஒரே அரை உள்ள வீட்டில் வசித்து வந்தான். வீட்டில் எப்போதும் கூட்டமாகவும், சத்தமாகவும் இருந்ததால் அவனுக்கும் அவன் மனைவிக்கும் அடிக்கடி சண்டை வருவதாக இருந்தது. குளிர்காலத்தில் கடுங்குளிர் இருக்கும் போது இரவு நேரங்கள் நீண்டவையாகவும் , பகல் நேரங்கள் மிகுந்த குளிராகவும் இருக்கும். அப்போது எல்லோரும் ஒரே அறையில் அடைந்து கிடந்ததால் ஒரே ரகளையாக தான் இருக்கும். அப்படி ஒரு நாளில் தன்னால் இதற்கு மேல் பொறுத்து கொள்ள முடியாது என்று அவனுடைய ராபியிடம் (யூத மத குரு) தன் துயரத்தை சொல்லி அறிவுரைக் கேட்க ஓடினான்.

என் வாழ்க்கை மிக மோசமாக உள்ளது, இன்னும் கேவலமாக மாறிவிடும் போலிருக்கிறது என்று புலம்பி தீர்த்தான். என் குடும்பம் மிகவும் ஏழ்மையில் உள்ளது. என் மனைவி, அம்மா, மற்றும் 6 குழந்தைகள் எல்லோரும் ஒரே அறையுள்ள வீட்டில் வசிக்கிறோம். எங்கள் வீட்டில் எப்போது பார்த்தாலும் சண்டையும், சச்சரவாகவும் இருக்கிறது. தயவு செய்து எனக்கு ஒரு நல்ல வழியை காட்டுங்கள். தாங்கள்  எது சொன்னாலும் செய்வதற்கு தயாராக உள்ளேன் என்று கூறினான்.

குரு சற்று யோசித்து தன் தாடியை வருடியபடி “சரி உன்னிடம் கோழி, சேவல்,வாத்து ஏதேனும் இருக்கிறதா?” என்று கேட்டார்.

ம்... சில கோழிகளும், ஒரு சேவலும், வாத்தும்  இருக்கிறது என்று கூறினான் அந்த ஏழை.

அப்படியா நல்லது. வீட்டிற்கு சென்று அந்த கோழிகளையும், சேவல், வாத்து எல்லாத்தையும் வீட்டிற்குள் அழைத்து சென்று விட்டு விடு, அவைகளும் உங்களுடேயே  வாழட்டும் என்று கூறினார்.

அப்படியே செய்கிறேன் குருவே என்று கூறினான் ஆனால் மனதில் என்னமோ தயக்கத்துடனே விடைபெற்றான்.



அந்த ஏழை வீட்டிற்கு சென்று தன்னுடைய கோழிகள், சேவல், வாத்து அனைத்தையும் வெளியிலிருந்த கூண்டிலிருந்து விடுவித்து தன்னுடைய வீட்டிற்குள் அடைக்கலம் கொடுத்தான்.



சில நாட்களில் வீடே களேபரமாக இருந்தது, சண்டை கூச்சலின் நடுவே கோழி கூவுவதும், வாத்து க்வாக் க்வாக் என கத்துவதும், கோழி இறகுகள் பறப்பதுமாய் ஒரே அமக்களமாக இருந்தது. வீடு சிறியதாகிக் கொண்டே போனது, குழந்தைகள் பெரியவர்களாகி விட்டனர். இதற்கு மேல் அந்த ஏழை மனிதனால் வீட்டில் நடக்கும் களேபரத்தை தாங்கிக் கொள்ள முடியாமல் தன்னுடைய குருவிடம் சென்று முறையிட்டான்.

குருவே!  என்ன ஒரு கொடுமை, என் வீட்டில் என்னேரம் பார்த்தாலும் ஒரே கூச்சலும். சண்டையுமாக இருக்கிறது, நிம்மதியாக சாப்பிட கூட முடியவில்லை சாப்பாட்டு தட்டில் கூட கோழி இறகுகளாக எப்போதும்  கிடக்கிறது. என்னை இந்த கொடுமையிலிருந்து காப்பாற்றுங்கள் என்றான்.

இதை கேட்ட குரு  சற்றே யோசித்து விட்டு உன்னிடம் ஆடு இருக்கிறதா  என்று கேட்டார்.
ஆம் ஆடு ஒன்று இருக்கிறது. அது அவ்வளவு உபயோகமில்லை என்றான்.
நல்லது! அதையும்  உன் வீட்டிலேயே தங்க வைத்து கொள் என்றார்.

உண்மையாவா சொல்றீங்க சாமி என்றான்  அந்த ஏழை மனிதன் ஒன்றும் புரியாமல்

நான் சொல்வது போல் செய் என்று கூறிவிட்டார் குரு





சற்று கவலையுடன் வீட்டிற்கு சென்றான் அந்த ஏழை, வெளியில் கட்டி இருந்த ஆட்டை எடுத்து வீட்டிற்குள் விட்டான்.

இப்படியே சிறிது நாட்கள் கழிந்தது. வீட்டின் நிலைமையோ இன்னும் மோசமாகி விட்டது. சண்டை கூச்சல் கோழி கூவுதல் எல்லாம் வெகு ஜரூராக வீட்டிற்குள் நடந்து கொண்டிருந்தது. இதற்கு நடுவில் ஆடு தன்  கொம்பை கொண்டு முட்டி கொண்டிருந்தது. வீட்டில் சிறு இடம் கூட இல்லாமல் அந்த குடும்பம் அல்லாடி கொண்டிருந்தது. இதற்கு மேல் தன்னால் தாக்கு பிடிக்க முடியாது என்று நினைத்த அந்த ஏழை தன் குருவை தேடி ஓடினான்.

சாமி என்னை காப்பாத்துங்க, ஆடு வீட்டையே
அமக்களம்  படுத்திகிட்டுருக்கு, என் வீடே நரகமாயிடுச்சி !!

குருவோ அவன் கூறுவதை கேட்டுவிட்டு, யோசித்தார், உன்னிடம் மாடு ஏதாவது இருக்கா  என்று கேட்டார். அதற்க்கு ஆம் இருக்கிறது என்றான் அந்த ஏழை. சரி அப்போ அந்த மாட்டை வீட்டிற்குள் எடுத்து கொண்டு போய் வைத்திரு என்று கூறினார். ஐயோ என்னால் முடியாது என்று கூறி அழுதான். சொன்னதை செய் என்று  கூறிவிட்டார் அந்த குரு.





மிகவும் சோர்வுடன் வீடு வந்து சேர்ந்தான் அந்த ஏழை. மாட்டையும் வீட்டிற்குள் எடுத்து சென்றான். இந்த குருவிற்கு என்ன பைத்தியமா என்று நினைத்து கொண்டான்.



சில நாட்கள் இப்படியே போயிற்று. இப்போதையோ வீட்டின் நிலைமையோ சொல்வேதற்கே இல்லை. சண்டை கூச்சல் கோழி பறந்து கொண்டும், கூவி கொண்டும் , ஆடு முட்டி கொண்டும் இருந்தன. இதற்கு நடுவில் மாடு எல்லாவற்றையும் மிதித்து கொண்டு நடந்து கொண்டிருந்தது. கடைசியாக இதற்கு மேல் தன்னால் இந்த வீட்டில் வாழ முடியாது என்று குருவிடம் ஓடினான்.

சாமி என்னை காப்பாத்துங்க, மாடு எல்லாத்தையும் மிதித்து கொண்டு இருக்கிறது என்னால் அந்த வீட்டில் மூச்சு  கூட வாங்க முடியவில்லை. என்னால் இதற்கு மேல் வாழவே முடியாது என்றான்.

குரு எல்லாவற்றையும் கேட்டு விட்டு, சரி நீ எல்லா மிருகங்களையும் வீட்டிலிருந்து  வெளியேற்று என்று கூறினார். இப்போவே போறேன் சாமி என்று ஓடினான்.



வீட்டிற்கு சென்ற ஏழை மனிதன் கோழி, வாத்து, ஆடு, மாடு எல்லாவற்றையும் வீட்டிலிருந்து வெளியேற்றினான்.

அந்த இரவு அவனும் அவன் குடும்பத்தாரும் அமைதியாக உறங்கினர். அன்றிரவு சண்டையும் இல்லை கோழி கூவலும் இல்லை, ஆடு மாடு தொந்தரவும் இல்லை.

அடுத்த நாளே ஏழை ஓடி சென்று குருவிற்கு நன்றி கூறினான்

சாமி! என் வாழ்க்கையை திரும்ப கிடைக்க செய்து விட்டீர்கள். நானும் என் குடும்பம் மட்டும் இருப்பதால் இப்போது என் வாழ்வில் அமைதி வந்து விட்டது. என்ன ஒரு மகிழ்ச்சி இந்த வாழ்க்கை.

